ௐ

# முண்டகோபநிஷத்

பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்ராஹ்மன: |
நிர்வேதமாயான்நாஸ்த்யக்ருத: க்ருதேன
தத்விஞானார்தம் ஸ குருமேவாபிகச்சேத்
ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் ||

(1-2-12)

ஸத்வ குணத்தை அடைந்த ஸாதகன் கர்மத்தின் விளைவாக அடையப்பட்ட உலகங்களை ஆராய்ச்சி செய்து வைராக்கியத்தை அடைகிறான். செயலால் உருவாக்கப்பட முடியாதது செயலால் அடைய முடியாது. ஆகவே, அவன் ஸமித்தை கையில் ஏந்தியவனாக அறிவை அடைவதற்கு மரபு வழியில் வந்த ப்ரஹ்மனில் நிலைபெற்ற குருவை அடைந்துதான் ஆகவேண்டும்.

